# ॥ षट्पदीस्तोत्रम् ॥

## ஷட்பதீஸ்தோத்ரம்

(1)

अविनयमपनय विष्णो दमय मनः शमय विषयमृगतृष्णाम् ।
भूतदयां विस्तारय तारय संसारसागरतः ॥

அவினய மபநய விஷ்ணோதமய மந: சமய
ம் ருகத்ருஷ்ணாம்!
பூததயாம் விஸ்தாரய தாரய ஸம்ஸார ஸாகரத:!!

ஹே விஷ்ணோ! எனது பணிவின்மையைப் போக்கு! மனதை அடங்கச் செய். பேராசையையும் தணித்து விடு. எல்லா ஜீவராசிகளிடத்தும் தயை வரச்செய். என்னை ஸம்ஸாரக் கடலிலிருந்து அக்கரை சேர்ப்பித்து விடு.

(2)

दिव्यधुनीमकरन्दे परिमलपरिभोगसच्चिदानन्दे ।
श्रीपतिपदारविन्दे भवभयखेदच्छिदे वन्दे ॥

திவ்யதுனீ மகரந்தே பரிமல பரிபோகஸச்சிதானந்தே!
ஸ்ரீபதிபதாரவிந்தே பவபயகேதச்சிதே வந்தே!!

கங்கையை மகரந்தமாகக் கொண்டதும், ஸத் - சித் - ஆனந்தமாகியவற்றை வாசனையாகக் கொண்டதும், உலகியல் துன்பத்தைப் போக்குவதுமான ஸ்ரீபதியான நாராயணனின் திருவடித்தாமரைகளை வணங்குகிறேன்.

(3)

सत्यपि भेदापगमे नाथ तवाहं न मामकीनस्त्वम् ।
सामुद्रो हि तरङ्गः क्वचन समुद्रो न तारङ्गः ॥

ஸத்யபிபேதாப்கமே நாத! தவாஹம் நமாமகீனஸ்த்வம்!
ஸாமுத்ரோ ஹி தரங்க: க்வசன ஸமுத்ரோ ந தாரங்க:!!

ஜீவாத்மாவான எனக்கும், பரமாத்மாவான உமக்கு மிடையில் வேற்றுமை இல்லையெனினும், ஹேஸ்வாமி நான் உம்மைச் சேர்ந்த அடிமையே; தாங்கள் எனது உடைமையானவ ரல்ல. அலைதானே ஸமுத்ரத்தையண்டிது; ஒருபோதும் கடல், அலைகளில் அடங்கியதில்லையன்றோ!

(4)

उद्धृतनग नगभिदनुज दनुजकुलामित्र मित्रशशिदृष्टे ।
दृष्टे भवति प्रभवति न भवति किं भवतिरस्कारः ॥

உத்ருதநக நகபிதனுஜ தனுஜகுலாமித்ர
மித்ரசசித்ருஷ்டே!
த்ருஷ்டே பவதி ப்ரபவதி ந பவதி கிம் பவதிரஸ்கார:!!

*கோவர்த்தனமலையை தூக்கியவரே! இந்திரனின் இளையவரே! அசுரக்கூட்டத்தை அழித்தவரே! சூர்ய சந்திரர்களை கண்களாகக் கொண்டவரே! தாங்கள் கண்ணுக்கெதிரே வந்து திறமையை காட்டும் பொழுது எவருக்குத்தான் உலகியலில் இழிவு தோன்றாது?*

(5)

मत्स्यादिभिरवतारैरवतारवतावता सदा वसुधाम् ।
परमेश्वर परिपाल्यो भवता भवतापभीतोऽहम् ॥

மத்ஸ்யாதிபிரவதாரை ரவதாரவதாடவதாஸதா
வஸுதாம்!
பரமேச்வர பரிபால்யோ பவதா பவதாப பீதோடஹம்!!

*மத்ஸ்ய-கூர்மாதி அவதாரங்களால் இறங்கிவந்து பூமியை காத்தருளும் தங்களால், ஸம்ஸார தாபத்தால் மருண்ட நான் காக்கப்பட வேண்டியவன்றோ! ஹே பெருமாளே!*

(6)

दामोदर गुणमन्दिर सुन्दरवदनारविन्द गोविन्द ।
भवजलधिमथनमन्दर परमं दरमपनय त्वं मे ॥

தாமோதர குணமந்திர ஸுந்தரவதனாரவிந்த கோவிந்த!
பவஜலதிமதன மந்தர பரமம் தரமபநய த்வம் மே!!

தாமோதரனே! குணங்களுக்கு கோயிலானவனே! அழகிய தாமரையொத்த முகம் கொண்டவனே! கோவிந்த! ஸம்ஸாரக்கடலை கடையும் மந்தர மலையானவனே! எனது பெரும் துன்பத்தைப் போக்குவாயாக!

(7)

नारायण करुणामय शरणं करवाणि तावकौ चरणौ ।
इति षट्पदी मदीये वदनसरोजे सदा वसतु ॥

நாராயண கருணாமய சரணம் கரவாணி தாவகௌ சரணௌ!
இதி ஷட்பதீ மதீயே வதன ஸரோஜே ஸதா வஸது!!

'ஹே நாராயண! கருணை வடிவானவனே! உமது திருவடிகளை சரணம் அடைகிறேன்' என்ற இந்த ஆறு சொற்கள் என் முகத்தில் எப்பொழுதும் தங்கட்டும்.

ஷட்பதீ ஸ்தோத்ரம் முற்றுப்பெறுகிறது.

